சிவமயம்.





இராமநாதபுரம் ஜில்லா, சிவகெங்கை சமஸ்தானம்
திருக்கோஷ்டியூருக்கடுத்த பெரிய ஒலைக்குடியில்
திருமணிமுத்து ஆற்றங்கரையின்மீதிருக்கும்

# நாற்றெட்டுலிங்க மூர்த்தியின் பதிகம்.

## திருத்தாண்டகப்பண்.

இஃது
ஷை யூரில் வசிக்கும்
விஸ்வக்ஞ
மலையாண்டி ஆச்சாரி குமாரர்
ர்ாமசாமி ஆச்சாரி அவர்கள்
இயற்றியது



புதுக்கோட்டை "தேசஊழியன்" பிரஸில்
பதிப்பிக்கப்பெற்றது.

1928

உ

சிவமயம்.

இராமநாதபுரம் ஜில்லா, சிவகெங்கை சமஸ்தானம்,

திருக்கோஷ்டியூருக்கடுத்த பெரிய ஓலைக்குடியில்

திருமணிமுத்தஆற்றங்கரையின்மீதிருக்கும்

# நூற்றெட்டுலிங்க மூர்த்தியின் பதிகம்.

# திருத்தாண்டகப்பண்.

இஃது

ஷையூரில் வசிக்கும்

விஸ்வக்ஞ

மலையாண்டி ஆச்சாரி குமாரர்

ராமசாமி ஆச்சாரி அவர்கள்

இயற்றியதை

புதுக்கோட்டை "தேசஊழியன்" பிரஸில்

பதிப்பிக்கப்பெற்றது.



# கதர் உடுத்துங்கள்.

  

உ

சிவமயம்.

# நூற்றெட்டுலிங்கப் பதிகம்.

## திருத்தாண்டகப்பண்.

அங்குமிங்கு மெங்குந்தானருவாய் நின் ற
அகண்டபரிபூறணமே அரசே உந்த ன்
நங்கையெங்கே நாமமெங்கே நலந்தானெங் கே
நற்பணிகள் செய்துவரும் நாட்டமெங் கே
பங்கயன்மால் வானுலகோர் சித்தரெங் கே
பண்ணுடனே பாடிநிதம் பணிவோரெங் கே
யிங்குநூற்றெட்டு லிங்கமான மூர்த் தி
யெந்தையே உன் கருணைதந்து யிரெட்சிப்பா யே.

அருமறைகள் சொன்னவுன்றன் அழகுதோன்று ம்
அம்மையுடன் அரிஅயனேடமரர் தோன்று ம்
பெருமைபெற்ற மக்களுடன் பிரியந்தோன்று ம்
பேரானந்தங்கள் பெருங்கூட்டந் தோன்று ம்
நறுமலரோடந்தி சந்திபூசை தோன்று ம்
நகைதோன்றும் நாதவொலிநடனந் தோன்று ம்
திருமணி முத்தாருகில் நூற்றெட்டா ன
சிவமேஉன் கருணைதந்து யிரெட்சிப்பா யே.

முன்னமிங்கு வந்தனுளெந்தனு ளோ
முறைதெரியாவெனப்படியுன் முடிவுகாண்பே ன்
யின்னபடி யென்றெனக்கு யெடுத்துக்காட் டி
யிடம்பொருளேவல் கொடுத்து யென்னையாளு ம்
செந்நெல்வளஞ் சோலைநகற்குடி நன்றாகி ச்
செல்வனே மனதிரங்கித் திருக்கண்பாரு ம்
கன்னலடைந்ததுபோதும் நூறெட்டா ன
கடவுளே கருணைதந்து யிரெட்சிப்பா யே.

பூமிதனில் நீயுதிக்தச் சோலைபார்த் து
போதாவாய் நூற்றெட்டும் பொருந்தங்கொண் ட
நேமியனேபராமுகமோ நிஷ்டைதா னோ
நீதனையீனுனக்கு நியாயமா மோ
காமியத்தைத் துறந்து நிற்குங்கருணைதா னோ
கணக்கெதுவோ னுனரியேன் கடந்தமோ ன
சாமியுனையாரறிவார் தமியேனுக் கு
தயைபுரிந்து கருணைதந்து யிரெட்சிப்பா யே.

சொல்லுதற்கு அரியபரம்பொருளே உள்ள த்
துள்ளிருந்து தோற்றமெல்லாந் துலங்குஞ்சோ தி
பல்லுயிற்குமுயிரான பரமேயிந்த ப்
பதியில்வந்த பாண்டியனே பாலன்மீ து
அல்லல்வினை வாராது அகற்றுமெந்த ன்
அப்பனே ஒப்பில்லாதாற்குந்தோ ணு
வல்லவனே நூற்றெட்டு லிங்கமூர்த் தி
மனதிரங்கிக் கருணைதந்து யிரெட்சிப்பா யே.

குறிதெரியேன் குலம்தெரியேன் குற்றமேசெ ய்
குணமுடையேன் குடிகேடனான பொல் லா
வெறியனை நீயேன்படைத்தாய் வீணிலிந் த
மேதினியில்னானடைந்த மேன்மைபோது ம்
அரிஅயனும் தேடி அலைந்தயர்ந்துவா ட
அறுதியாய்நின்ற யெந்தனையாமெய் யா
சிறியவனானேதரி வேனூற்றெட்டா ன
சிவமே உன்கருணைதந்து யிரெட்சிப்பா யே.

உற்றவரும் பெற்றவரும் உன்னையன் றி
உதவுவாரெவரொருவரொன்றுங் காணே ன்
கொற்றவராய் வாழ்ந்தாலும் வானாள்விட்டு க்
கொடுப்பதல்லா திருக்கும் வகைகொள்வாருண் டோ
கற்றறியேன் கற்றோரைக்காணேனிந்த க்
காலமெல்லாம் யானலைந்து கலங்கிவா டி
முற்றுமுனை நம்பிவந்தேனூற்றெட்டா ன
மூர்த்தியே கருணைதந்து யிரெட்சிப்பா யே.

பத்தி நெறிதந்து யெனைப்பார்க்கவேணு ம்
பட்சமுடனுனுமுனைப்பணிய வேணு ம்
உத்தமர்கள் கூட்டெனக்கு ளட்டவேணு ம்
உன்னருளில் அநுதினமும் உருகவேணு ம்
சுத்தபரிபூறணத்தின் தோற்றம்வேணு ம்
சுழிமுனையின் வழிகண்டு சொக்கவேணு ம்
சித்தமதில் விளையாடும் நாற்றெட்டா ன
சித்தனே உன்கருணை தந்து யிரெட்சிப்பா யே.

பண்டுசெய்த வினைகளெல்லாமிறக்கவேணு ம்
பந்தமெல்லாம் யென்னைவிட்டுப்பறக்கவேணு ம்
கண்டு போல்ருசி யெனக்கு உறைக்கவேணு ம்
கனிவுவர யென்னெஞ்சங் கறைக்கவேணு ம்
உண்டுபசியாருதலுன்னருளே வேணு ம்
உன்பதத்துக்காளாகும் உறுதிவேணு ம்
மண்டலமெலாம் புகழும் நாற்றெட்டா ன
மாதேவா கருணைதந்து யிரெட்சிப்பா யே.

கரும்பெனவுன் கருணையினித்திருக்க வேணு ம்

கர்மவினை ஆசையெல்லாங் கடக்கவேணு ம்

அரும்புகண்டு உன்றுள் பூசிக்கவேணு ம்

அநுதினமும் உனைமறவா தருளே வேணு ம்

பெரும்பொருள் நீ யென்றுனைப் பெறவே வேணு ம்

பின்னுமொரு வசையில்லாப்பேரும் வேணு ம்

விரும்புவோர்க்கருள்புரியும் நூற்றெட்டா ன

மெய்யனே கருணைதந்து யிரெட்சிப்பா யே.

சுபம்,

